பாரடா படாட்சரத்தின் கொடுமைபோலே
பார்தனிலே சித்தர்கடான் சொல்லமாட்டார்
ஆரடா ரவிதானு மறைந்துபோனால்
அண்டமெல்லா மாசழிந்து கெட்டுப்போகும்
நோரடா ரவிதனைத்தான் வருத்தவென்றால்
நீமகனே நஙகென்று நிலையைப்பாரு
வேரடா ரவிதானு மொளியாய்வீசும்
வித்தகனார் கயிலாசம் வெளியாய்ப்போச்சே. நஙக

போச்சடா விசையறிய வேறொன்றில்லை
புவனமென்ற படைப்புவித்தை யிதற்குள்ளாச்சு
ஆசசடா விதையறிய வொருவரில்லை
யகிலாண்ட கோடியண்ட மடஙகிவாழும்
வாசசடா மூன்றெழுத்தி னுறுதியாலே
மைந்தனே சகலவித்து மாடலாச்சு
மூச்சடா மூன்றெழுத்து மேதென்றக்கால்
முக்கியமா மகாரமென்ற மவுனமொன்றே. நஙஉ

ஒன்றான மகாரமென்ற ம்வுனத்தாலே
யொருபோதுங் கூடழிந்து போகாதையா
சென்றானு மகாரமென்ற மவுனந்தன்னைச்
சேரடா குலதெய்வந் தன்னைப்பார்த்து
என்றானு மூன்றெழுத்திற் கிதுவேபீட
மெதிரிகளை யீடழிக்கு மிதுதான்மைந்தா
ஒன்றாகு மிதுபொருளென் றறியாப்பேர்க்கு
உலகத்தி லொன்றுமில்லை யொடுக்கந்தானே. நஙந

தானென்ற வொடுக்கமிலை யறியாத்தோஷஞ்
சாதித்துப் பாரார்கள் சவங்கல்மாடு
ஊனென்ற வுடலெடுத்தாற் பலன்தானென்ன
வுயிரறியாப் பாதகர்கா னுலுத்தராவார்
வானென்ற முடிபார்த்து அடியும்பார்த்து
வாழ்த்தடா மூன்றெழுத்து வலிமைபார்த்துக்
கோனென்ற குறிபார்த்துக் குருவைக்காத்துக்
குலதெய்வந் தனைப்பாரத்துக் கூடுகூடே. நஙச

கூடியே மகாரமென்ற மவுனஞ்சொன்னேன்
குலதெய்வந் தனைக்காணக் குறியுஞ்சொன்னேன்
ஆடியே மகாரமல்லோ அகாரமாச்சு
அம்மம்மா மூன்றெழுத்து மதறகுளளாச்சு
நாடியே ரவிமதியு மதுவேயாச்சு
நானென்று சொல்வதுதா னதுவேயாச்சு
பாடியே திரியாதே மூன்றெழுத்தைப்
பதறாதே சிதறாதே பணிந்துகொளளே. ௩சரு

கொள்ளடா மூன்றெழுத்தின் பயனைத்தானுங
குவலயத்தி லொருவருககுந் தெரியாதப்பா
அல்லடா மகாரமொடு நகாரத்துக்கும்
அப்பனே யுயிராச்சு சிகாரங்கண்டாய்
வல்லடா பெரியோர்க ளறிந்துகொண்டு
மாறாமல் மூன்றெழுத்தை மருவியோதி
வில்லடா விற்பூட்டி மாறினாற்போல்
விசைகொண்டு மூன்றெழுத்தை விரும்பிப்பாரே. ௩சசு

பாரப்பா மசிநசியென் றெழுத்தைத்தானும்
பராபரந்தான் வந்தாலு மரிதேசொலல
ஆரப்பா லோகத்தோர்க் கீய்ந்தாயானல்
ஆகாய வெள்ளிடியு மதிறவீழும்
நேரப்பா வாலைவிஞ்சை யென்றுபேரு
நிஷ்டையொடு சமாதியென்று மிதறகுப்பேரு
வேரப்பா வெறும்பேசசுப் பேசிடாமல்
விந்துவட்டந் தனையறிந்து விரித்துக்காணே. ௩சஎ

காணடா பச்சைநிறம் விழியினுள்ளே
கலந்தெழுந்த சதாசிவனே கணேசனாச்சு
தானடா யொளியாலே பிறைபைவீசிச்
சகலருக்கு மாதார மாகிப்போசசு
கோனடா குலதெய்வத் தருளினாலே
கொடியரவிப் பிரபையங்கே விழிக்குள்ளாச்சு
ஊனடா வுயிராச்சு வுலகமாச்சு
ஓம்நமசி வாயமென்ற ததுவாம்பாரே. ௩சஅ

பாரடா வேங்கையது கொடிதேஷமைந்தா
பாவையர்க ளாசையிலே பாய்ந்தேயேறும்
ஆரடா வேஙகைதனைக் கட்டிமைந்தா
அறிவான சிஙகமதி லப்பாயேறி
ஊரடா பஞ்சசத்தி தியானஙகண்டே
யொன்றென்ற பொருளென்றே யுருகிவாடிக்
கோரடா மனமுருகிக் குவிந்தாயானற்
குண்டலியாளு சத்தியுட குறியிதாச்சே. ௩௪௯

ஆச்சடா குண்டலியாளு சத்தியென்று
லப்பனே மனோன்மணியென் றவடகுப்பேரு
வாசசடா மனமலலோ மணியதாகும்
வசசிரா யுதமென் றேயிதறகுப்பேரு
காச்சடா பிசகாம லுள்ளேவாஙகுங
க்லேமாறி யிடசாரி யாடடிலவைக்கும்
மூச்சடா பதுங்கியினிக் குமிழிபாயும்
மூச்சுடாம் பேரின்ப முறையிதாமே. ௩௫0

ஆமென்று சொன்னவிடம் அடஙகியபாயும்
அப்பனே புற்றரவு மதிலேசாரும்
ஓமென்று சொல்லிடவே விடஙகள்மாளும்
உன்னிடத்தில் நினைத்தபடி யுதவிசெய்யும்
நாமென்ற சொல்லற்றால் நமனைவெல்லும்
நாதாந்தப் பூரணத்தின் நடுவேகூட்டும்
காமென்ற காமனுந்தான் பொசுஙகிப்போவான்
காயமே பெலங்கொடுக்கு காட்சிபாரே. ௩௫௧

பாரப்பா வின்னமொன்று பகாக்கேளு
பார்தனிலே யொருவருக்குந் தெரியாதபபா
ஆரப்பா விந்துவென்றுஞ் சிவன்றானென்றும்
ஆகாச மானகுரு நாதனென்றும்
நேரப்பா விதிப்படியே யனேகம்பேராம்
நிலையான சிவனார்தன வேம்புதன்னை
வேரப்பா வேரெடுத்துப் பலந்தான்நூறு
வித்தகனே யுலரவைத்து எடுத்துக்கொள்ளே. ௩௫௨

கொள்ளடா வுலரவைத்த வேருதன்னைக்
கூறுகிறேன் மசியென்றே சாபந்தீர்த்து
அல்லடா நறுக்கியதைப் பாண்டத்திட்டு
அப்பனே செலந்தானும் படிதான் நாறு
வல்லடா வல்லவரீ யாகவென்றால்
மைந்தனே வேருதனைச செலத்திறருககிச்
சொல்லடா ஐயென்றுய கிலியென்றேதிக
சோடசோப சாரமுடன் பூசைபணணே. ௩௫௩

பண்ணுவது பூசைவிதி யறிந்துபோற்றிப்
பாலகனே யொருவிறகால வறமக்காச்சிக்
கண்ணுமனக் கண்ணறிந்து விண்ணைப்பார்த்துக்
கலந்தெழுந்த செலநதானும் படிரண்டானல்
மண்ணுலகி லொருவருக்குங காட்டாமற்றன்
மைந்தனே காஷாயமதை யிருத்துவாங்கி
உண்ணுவது ஓரெழுத்தால் மவுனமுன்னி
யொடுங்கியே நிலைதனைத்தா னுற்றுப்பாரே. ௩௫௪

பாரப்பா பத்துபலம் பாஙகிபட்டை
பாச்சடா கொடுவலிவேர் பலந்தான்பத்து
ஆரப்பா பிரம்பின்வேர் பலந்தான்பத்து
அபபனே மூனறையுநதா னிறுத்துவாங்கித்
தேரபபா இடித்திடுவாய் தூளதாகத்
தேவிபஞ்ச சத்தியவள தியானங்கொண்டு
ஏரப்பா பாண்டத்திற் றூளகடன்னை
யென்மக்காள் போடையிலே சாபந்தீரே. ௩௫௫

தீரடா சாபமெல்லாம் நிவர்த்திசெய்து
தெளிவான தூளைகுழித் தைலம்வாங்கி
வேரடா வெறும்பிலுக்காய்த் திரிந்திடாமல்
வீறன மிளகுபலங காலதாக
நேரடா திப்பிலியும் பலஙகாலாக
நிறுத்திடுவாய் சுக்கதுவும் பலஙகாலாகச
சேரடா காந்தமுந்தான் விராகன்ரண்டு
சேர்த்திடுவாய் ரசந்தானும் விராகன்ரண்டே. ௩௫௬

விராகனிடை யிப்படியே நிறுத்துவாங்கு
விருன வஸ்துவிட்டுச் சாமம்நான்கு
மருதபடி யதையறைதது வழித்துக்கொண்டு
மைந்தனே முன்சொன்ன தைலந்தன்னில்
விராகத்தாள் பாதமுன்னித் தியானம்பண்ணி
விட்டாட்டி மருந்தையெல்லாய கலக்கிக்கொண்டு
தாராதாமாய் முன்சொன்ன கஷாயந்தன்னிற்
றுக்கிடுவாய தைலமெலலா மொன்றுய்ததானே. ௩௫௭

தானென்ற ஆவின்நெய படிரண்டாகத்
தாக்கடா கஷாயமது தனனில்விட்டுக்
கோனென்ற குருவருளாற் கிலியென்றேதிக்
கூறடா லட்சமுறு குணமதாக
வானென்ற மெழுகுபத மாகக்காசசி
வாய்பேசா தெடுத்திடுவாய மைந்தா நீயும்
தேனென்ற நெய்யையுநதான் பதனம்பண்ணிச
சீவன்முத்த னுவதற்குச செப்பக்கேளே. ௩௫௮

சேளடா தேகமுந்தான் வலுத்துபபோசசு
கிருதமிது போலவுமே யார்தான்சொலவார்
ஆளடா மேகமெல்லா மழிந்துபோகும்
அப்பனே ஜனனிசுர முடனேதிரும
வாழடா யீளையொடு காசந்தீரும்
வஞ்சனைகள மருந்தீடு மாறிப்போகும்
நாளடா பெரும்பாடு வுடனேதீரும்
நாடிநீர்ச் சுருக்குநீ ரிழிவுபோமே. ௩௫௯

போமடா குஷ்டமெல்லா மோடிப்போகும்
பொல்லாத சூனியமும் பொசுஙகிப்போகும்
ஆமடா விஷமெல்லா மகன்றுபோகும்
அடஙகாத சூதகததின் திரடசிபோகும்
நாமடா அரையாப்பு வெடடைதீரும்
நடுஙகியதோர் வாதமெல்லாம் நாசமாகும்
வாமடா மண்டலந்தான் கொண்டபேர்க்கு
யாருத வயிற்றோட்ட மாறும்பாரே. ௩௬0

பாரப்பா இம்மருந்தை யுண்ணும்போது
பாவையர்க ளாசையுந்தா னாகாதப்பா
ஆரப்பா ஆசைவைத்தே யுண்டாரானால்
அவன்தேக மடசணத்தி லழிந்துபோகும்
நேரப்பா நேரமொன்று விராகன்கண்டு
நிசசயமாய் நெய்மையுந்தா னிறுத்துக்கொண்டு
வேரப்பா வெளியேதான் சொலவிடாமல்
வினைதீர மருந்தையுந்தான் விரும்பிகொள்ளே. நகூக

கொள்ளடா இக்கிருதம் போலேமைந்தா
குவலயத்திற் சித்தர்கடான் சொல்லார்சொல்லார்
அலலடா வுமையாளுத் தாரகேட்டே
அப்பனே கிருதமெல்லாம் வெளியாயச்சொன்னேன்
வல்லடா வல்லடியாய்ச சித்தர்கூடி
வருந்தியெனைப் பணிநதவர்கள் குருவென்றார்கள்
சொல்லடா செல்வனென்றுஞ் சிவனென்றுஞ்
செப்பினோ ரோமென்று மாமென்றேனே. நகூஉ

ஆமென்ற சொற்கேட்டுச் சித்தர்கூடி
யாதிகுரு நீயென்று அருளைப்போற்றி
ஓமென்று குண்டலியைப் பார்த்தேயாடி
யுனைப்போலே சித்தர்கடா னில்லையென்றார்
நாமென்று அவர்களுக்குச சொன்னபேசசு
நாதாந்த மவுனமதை யவர்கேயீந்தேன்
ஓமென்று மாமென்று மெழுத்தைக்காட்டி
உயர்வான வடகிரியி லிருமென்றேனே. நகூங

இருமென்ற பேசசாலே ஆ-ஊ-என்று
ஏகினார் குறுஞ்சித்த ரனேகங்கோடி
திருமந்த்ர மூலமெல்லாம் வெளியாய்க்காட்டிச்
செகத்திலுள்ள மனிதர்களைச் சித்தராக்கிக்
குருமந்த்ர மறியாமற் சாவாரென்று
குணம்வந்து மனதிரங்கிக் குருபோற்சொன்னேன
மருமந்த்ர மேதுக்கு மக்காளமக்காள்
மகாரமல்லோ தீபவொளிர்மார்க்கம்பாரே. நகூச

பாரப்பா பாமசிவ னிம்மூலத்தாற்
   பரையினிடம் வாழ்வதற்குப் பாக்யம்பெறரூர்
ஆரப்பா விம்மூல மறிந்துநானும்
   அவர்தனக்கு மெட்டாத வஸ்துவானேன்
நேரப்பா வஸ்துசட்டாட சாருமாகி
   நீங்காத சிற்றறிவெற றறிவுமானேன்
காரப்பா வுந்திநிலை கண்டால்மோட்சம
   காணட்டாற் சழுதையென்று காட்டுறேனே. ௩சரு

காட்டுறேன் கழுதையென்று சொன்னால்மோட்சங
   களளனெனறு சொனனலுய கபட மார்க்கம்
காட்டுகிறே னியான்றானும் வெளியாச்சொன்னேன்
   நான்றானு சொல்லாட்டாற பாவம்பாவம்
வீட்டிலே யிருந்துநீ தீபம்வைத்து
   வேடிக்கை பார்த்திடுவாய் சிலம்பிறைசை
காட்டிலே திரிந்தாககால் வருவதேது
   கபடற்ற சித்தனென்றுற் கண்டுகொள்ளே. ௩சசா

கொள்ளாத பசுவுக்கும பாலஙகேது
   குருடான கணணுககு வெளிச்சமேது
சொல்லாத பேசசுக்குக் கேள்வியேது
   சோரஞ்செய் மஙகையாக்கு வாழவுமேது
கல்லாத வீணருக்குக் கல்வியேது
   காணாத பேர்களுக்குக் காட்சியேது
விளளாத சீடனுக்குக் குருவுமேது
   வேடிககை யாய்ததிரிநதால விழலாம்பாரே. ௩சள

பாரப்பா மவுனமுண்டு பாராவிட்டாற
   படீரெனவே யிடிவிழுந்து பட்டுப்போவான்
ஆரபபா மவுனததா லறிவைக்கண்டு
   ஆட்டமென்ற பஞ்சசத்தி தியானத்தாலே
சேரப்பா பஞ்சசத்தி தியானத்தாலே
   செகத்தோர்க ளடிபணிந்து தெண்டஞ்செய்வார்
மாரப்பா கீழ்மேலா ராயநதுபார்த்து
   மனதொருமை யாகவுந்தான் மனதிறறஙகே. ௩௩அ

தங்கடா செடிபூடு விருட்சமெல்லாஞ்
சம்புசதா பரவெளியே யல்லால்வேறு
அங்கடா வுயிரெல்லாஞ் சிவமதாகும்
அடங்காத மலைகாடுஞ்சி வமதாகும்
தங்கடா இப்படியே சிவமதாகிச்
சகலருக்கு முயிர்க்குயிராய்த் தானேதானாய்ப்
பங்கடா பலவிதமாய் மாயைதோன்றிப்
பராபரையு மொன்றாகி யிருந்தவாறே. ௩௬௯

வாரான தேவிக்குக் கண்தான்பார்த்து
வளமான சிவனுக்குப் பதினொன்றாகும்
தாரான கண்ணையுந்தா னறிந்தால்முத்தி
தவறினா லுணைவாறித் தகாத்துப்போடும்
கூரான இடகலையே காலனாகுங
குறிப்பான பிஙகலையே பரசமாசசு
போரான சுழிமுனையே முத்தியாகும்
பேசாத குலதெய்வந் தன்னைப்பாரே. ௩௭0

பாரப்பா வெங்கெங்கு மோடினாலும்
பலபலவாய் மந்திரஙகள் படித்திட்டாலும்
ஆரப்பா மவுனமென்ற ஆதிபீடம்
அதினாலே சகலசிதது மாட்டிவைக்கும்
நேரப்பா மற்றதினா லாவதென்ன
நிலைகண்ட பெரியோர்கள் நீனாசுவார்கள்
ஊரப்பா கோடியிலே யொருவனுண்டு
உற்றுணர்ந்த பெரியோர்க ளுண்மைதானே. ௩௭௧

உண்மையென்றால் மனதுண்மை யிருக்கவேணும்
உயிர்தோறும் நாமென்று நினைக்கவேணும்
தண்மையிலே யதிகமாய்த் தண்மைவேணும்
தவறாத தாரணையிற் சாரவேணும்
அம்மையெனு மாத்தாளைப் பணியவேணும்
அஷ்டாஙக வெக்கியஙகள் செய்யவேணும்
ஜன்மமென்ன பாவத்தா லெடுத்தஜன்மம்
சடமழியா திருந்தவர்க்கு முத்தியாமே. ௩௭௨

முத்தியுமாய் முப்பொருளாய் முளைத்தலிங்கம்
  முளைத்ததிலே யாவுடைய மானலிங்கம்
சத்தியமாய்ச் சூலையாக வாழ்ந்தலிங்கம்
  சரமாறிக் கால்மாறி யாடும்லிங்கம்
புத்தியிலே பேதையென்றும் பொருந்தலிங்கம்
  புல்லருக்குத் துணையாகப் புகுந்தலிங்கம்
எத்திசையு முயிர்தோறு மிருந்தலிங்கம்
  ஏகாந்த லிங்கமென்று மிசசம்பாரே. ௱௭௩

பாரப்பா லிங்கமென்றும் பாந்தானென்றும்
  பஞ்சசத்தி யாளுடை பீடமென்றும்
ஆரப்பா வாசிமனோ லயந்தானென்றும்
  அடுக்கடுக்கா யங்கங்கே செனித்ததென்றும்
நேரப்பா மூலமென்றும் பீசமென்றும்
  நிலையான சாரணைதா ரணைதானென்றும்
ஏரப்பா இந்திரிய வட்டமென்றும்
  எங்கெங்கும் நிறைந்தசிவ லிங்கந்தானே. ௱௭௪

தானென்ற சிவலிங்க மியார்தான்காண்பார்
  தன்னிலைவைத் தானறிந்த பெயர்க்கேகிடடும்
மானென்ற மகாரமதை யறியாப்பேர்க்கு
  மகாலிங்கந் தெரிசனைதான் கிடையாதப்பா
வானின்று வளர்ந்தமணி பூரகத்தில்
  வடவரையா மேருவென்று வந்தலிங்கம்
கோனென்றுங் குருவென்று மானலிங்கங்
  கூறவென்று லதினாலே பேசலாசசே. ௱௭௫

பேசாத வெழுத்தாச்சு மகாரமாச்சு
  பேசவென்றால் வாய்திறந்து பேசலாச்சு
கூசாத வெழுத்தல்லோ சூலையாந்தெய்வங்
  கூறுதற்கு மென்றாலே நாவுமுண்டோ
ஏசாதே வெளிதிறந்து சொன்னேனென்று
  என்மக்காள் மனதிரங்கி வெளியேவிட்டேன்
காசாசை வைத்தவர்க்கு ஞானமேது
  கருத்தறியா மடையருக்குக் காட்டொண்ணாதே. ௱௭௬

ஒன்றான சத்தியடா வுறவுமாகி
யுன்னோடே பிறந்ததொண் ணூற் றாறுபேரை
நன்றாக நசித்திடலா மவுனங்கண்டால்
நாட்டாட்டால நகைபுரிந்து பேசுவாளாம்
குன்றாதே மவுனம்வைக்கும் போதுநீயுங்
கோடிதன மிருந்தாலுங் குருவுக்கீவாய்
மன்றாடிப் பண்ணாதே மறகட்டாதே
மந்திரங்க மட்டுமடா குருவைக்காரே. ௩௭௭

காரையா பன்னிரண்டு வருடங்காத்தாற்
காட்டுவார் மவுனமென்ற விஞ்சைதன்னை
மாறாத வாழ்வல்லோ சிவயோகத்தால்
மயங்கினால் வருவதென்ன விழலாய்ப்போச்சு
பாராதே சந்தேக மாகமைந்தா
பார்த்தாக்காற் பாவம்வருந் தோஷமாகும்
நோராதே சந்தேகந் தெளிந்துநீயும்
நிஷ்டையிலே நின்றாக்காற் காட்டுவாளே. ௩௭௮

காட்டுவாள் குருமொழியுந் தவறாவண்ணங்
காரணமே பூரணமே யென்றுபோற்ற
நாட்டுவா ளென்மகனே வாவாயென்பாள்
நல்வினையுந் தீவினையும் நசித்துப்போகக்
கூட்டுவாள் தன்னோடே யுறவதாக்கிக்
கூறுவாள் மவுனமென்ற விஞ்ஞையெல்லாம்
பூட்டுவாள் கற்பமறிந் துண்ணச்சொல்லிப்
புகழ்ந்திடுவா ளென்மகனே யென்றேபோற்றி
மாட்டுவாள் நமனையுந்தான் மாண்டுபோக
மாறாத வாசியிலே யேற்றுவாளே. ௩௭௯

ஏற்றுவாள் கண்மணியே மகனேயென்று
ஈசனுக்கு மேலாக விருக்கசொல்வாள்
வாழ்த்துவா ளமுதமெல்லா முனக்கேயீந்து
வந்தவினை யற்றிடவே வாக்குமீவாள்
மாற்றுவாள் பிறவிதனை வரவொட்டாமல்
மயக்கமென்ற மாயையெல்லாம் வாங்கிக்கொள்வாள்
ஏற்றுவா ளீராறு தலத்தினூடே
யென்மகனே யென்றுசொல்லிக் கூறுவாளே. ௩௮0

கூறுவதற் கெளிதாமோ அவடன்கோலச்
கோலமென்ற கோலமெல்லாம் வெகுவாஙகூத்து
சேருவது கெதியறிநது சேருவாளாஞ்
செகத்தோடே கூத்தாடித் திரிகுவாளாம்
ஏறுவது லாடத்தி லேறுவாளாம்
என்தாயாள் முகமாறி யாடுவாளாம்
மேருவிலோர் கால்மிதிததுக் கொள்ளுவாளாம்
மெல்லியடா நல்லவளாம வருகுவாளே. ௩௮௧

வருந்தாத பாவிகட்கு வருந்துவாளோ
வம்புசொலும் வீணாதஙக ளிடஞ்சேர்வாளோ
பொருந்தாத போகளுக்குப் பொருந்துவாளோ
புல்லர்களை நம்பியுநதான் வருகுவாளோ
இருந்தாலு மவுனமதை யெணணினாலும்
என்தாயைப் போறமூர்க்கு வருவதுண்டோ
திருநதிடவே மலையாமல் நிலையைப்பாரு
சீவன்முத்த ஞவதறகுத் தீர்க்கம்பாரே. ௩௮௨

பாரடா இன்னமொரு கிருதஙகேளு
பாவமெல்லாம் பறக்குமடா இளைமைந்தா
ஆரடா வில்வவேர் பலந்தான்நூறு
அப்பனே நறுக்கியதைப் பாண்டத்திடு
நேரடா செலநதானும் படிதான்நூறு
நீமகனே வார்த்திடுவாய் பாண்டத்துள்ளே
ஏரடா வோர்விறகா லனலைமூட்டி
யென்மக்காள காய்ச்சிடுவாய் வறறததானே. ௩௮௩

தானென்ற செலந்தானும் படிரெண்டாகத்
தவறுமற் காச்சியதை யிறக்கிக்கொண்டு
கோனென்ற குருவருளால் மசியென்றேறுதிக்
குமரிசிவ காமிக்குப் பூசைசெய்து
வானென்ற மருதம்வோ பலந்தான்பத்து
வளர்கண்டஙு கத்திரியும் பலந்தான்பத்து
கோனென்ற தூதுவேளை பலந்தானஞ்சு
கூட்டியே நறுக்கியதை யெடுத்துக்கொள்ளே. ௩௮௪

கொளளடா தூளைகுழித தைலமவாஙகிக
குருவான தேசியெனறே மனதிறகொண்டு
அலலடா தைலமதை யெடுததுகக்கொண்டு
அப்பனே குமரிச்சார் படிதான்நாழி
வல்லடா வாஙகியதைப் பதனம்பண்ணி
மைந்தனே வாலுழுவை பலந்தான்காலு
சொல்லடா திரிகடுகு வொவ்வொன்றுக்குச
சூட்டடா காற்பலமவ் வீதமாமே. ௩௮௫

ஆமடா கடுகுரோ கணியுமைநதா
அப்பனே யரைததையொடு ஏலஞ்சேர்த்து
ஓமடா விநதுப்புக் கிராமபுகாரம்
ஓகோகோ விராகன்மூன் றுவவொன்றுக்கு
நாமடா முப்புசுண்ணம விராகனென்று
நலமாக நிறுத்தெல்லாம் வாங்கிக்கொண்டு
வாமடா வடித்துவிடடுச் சாமம்நாலு
வளமாக வரைத்ததையும் வாஙகிகொள்ளே. ௩௮௬

கொள்ளடா முன்சொன்ன கஷாயநதன்னிற்
குழிததைல மருந்தோடு குமரிசசாறும்
அலலடா வொனறுககசேர்த்துமைந்தா
ஆவின்நெய் படியுந்தா னிரண்டுசேரு
சொல்லடா வொன்றுகக் கிணடிக்காசசிச
சொரூபமுளள நெய்தானும் மெழுகதானால்
வல்லடா விரக்கியதை யாறவைத்து
வாலைபஞச சததியுட தியானஞ்செய்யே. ௩௮௭

செய்யப்பா கிருதமதை வெளிவிடாதே
தேசத்தோா தஙகளுக்கே யீநதிடாதே
மெயயபபா வறட்சியொடு மீளைதீரும்
மேகமென்று லுலகத்தி லோடிப்போகும்
ஐயப்பா வாயுவெலலாங் கலைந்துபோகும்
ஆதார சதாசிவததை யறியசசெய்யும்
பொய்யப்பா போகாது இயமனேது
பூதலத்திற சாவேது புண்ணியோர்க்கே. ௩௮௮

புண்ணியவா னவர்க்குங கிடடுங்கிடடும்
பொய்பேசும் புல்லருககுக கிடடாதபபா
தன்னினைவாய் கிருதமதை விராகன்மூன்று
சததியமாய் மணடலநதான் னிருபோ துண்ணக்
கன்னிமனோன் மணியாடன் கிருபைதஙகும்
கலவியிலே மிச்சமடா மோகமுணடு
ஜனனிசுர முளளதெலலாந தொலைநதுபோகுஞ்
சாநதானும நிலைதனிலே தஙகுமபாரே. ௩அ௯

பாரப்பா பாவிகட்குக் கிருதமீந்தாற
பராபரையாள சேவையுமே கிடையாதப்பா
ஆரபபா விப்படிததான் சொலவாருணடோ
அகததியமா முனியேகே ளுனக்காயசசொன்னேன்
நேரபபா வெறும்வாயை மென்றிடாமல
நிஷ்டையொடு சமாதியிலே நின்றுகொண்டு
வேரப்பா தவமபத்ம கிரியிலேதான்
வெகுகோடி காலமெல்லா மிருந்தேன்காணே. ௩௯0

காணடா தவசுசர வணையிலேநான்
கலநதெழுநத மேருவென்று மதிலுணடாக்கித
தானடா பாஙகுன்ற மதுவேயாகிச
சமாதியிலே வெகுகோடி காலமடடும்
நானடா வெளியேறித தேவிபாதம
நலமான வசுரர்குல மறுககவெனறு
வீணடா போகாமல வேடமிட்டு
விரைந்தேறிக் குருமலையில் வாழ்ந்தேன்பாரே. ௩௯க

பாரப்பா அம்மலையி னுச்சிமீதிற
பரமசிவ னெனைக்கண்டு பணிநதுகொண்டார்
ஆரப்பா அசுரர்குல மறுக்கசசொன்னார்
ஆததாளுஞ சத்திவடி வேலதானுளை
நேரப்பா அதிலிருக்குஞ சிததர்கோடி
நீரார்கா ணென்றுசொல்லி யென்னைக்கேட்கத்
தேரப்பா பரவெளிககுக குருவாம்நானுஞ
சிறுவயது மைந்தனென்று செப்பினேனே. ௩௯உ

செப்பிடவே சித்தரெல்லா மென்னைப்பார்த்துச
சிவமுருகா கயிலாச வாணியென்று
ஒப்பியே யெல்லோரும் பணிந்தாரென்னை
யுற்றதொரு மவுனமெல்லா மவருக்கீந்தேன்
அப்பியே யறிந்தார்கள சித்தர்கோடி
யதிலிருந்கோ ளென்றமொழி யவர்க்குச்சொலலித்
தப்பியே செந்தூரின் மேருவேறிச
சண்டாள வசுரர்களை வதைத்தேன்பாரே. ௩௬௩

பாரப்பா குருமலையைப் பத்திப்பாரு
பாரதனிலே யொருவருந்தான் சொலலமாட்டார்
ஆரப்பா அம்மலையின பத்தியோரம்
அனந்தமடா குகைகளெல்லா மடைத்துபபோட்டேன்
நேரப்பா செந்தூர மதிலேகட்டி
நிலைப்பான கணையெருமை மாஙகளகோடி
தேரப்பா கணஙகளென்ற மாஙகளகோடி
செகந்தனிலே சொல்லாதே தெளிவுதானே. ௩௬௪

தானடா தானிருந்து தவசுசெய்து
சத்திவடி வேலுருவம் பெற்றேனஙகே
கோனடா குருமலையைப் போலேமைந்தா
குவலயத்தில் மறறுமொரு கிரிதானேது
தானடா அதிலிருக்கும் பெருமைதன்னைத்
தவசிகளுஞ சித்தாகளுஞ் சொல்லார்சொல்லா
வானடா மவுனமது அறியவென்றால்
வாடாத கிரிதனக்கு வருகுவாயே. ௩௬௫

வருகுவா யெனைநினைத்து வாலைவிஞ்சை
வருந்துவாய் பராசத்தி யருளைப்போற்றித்
தருகுவே னவர்களுக்கு ஞானமெல்லாஞ
சண்டாளத் தத்துவஙக டொலைந்துபோகும்
மருகுவாய மவுனமுண்டு அமுதங்கொண்டு
மாசற்ற பெருவெளியை மனதிறகொண்டு
பெருகுவாய் பேசாத வெழுத்தைநாடிப
பேரினப மானதையுந் தொடர்ந்துகூடே. ௩௬௬

கூடாமற் சிறிதுபேர் ஞானம்பார்த்துக்
குவலயத்தி லலைவர்கள தெய்வமென்று
ஆடாம லாடிவொ ராட்டமேது
அம்பலத்தைப் பாராட்டா லறிவுமேது
வீடான வீடழிந்தால் ஞானமேது
விந்துவிட்டால வலுப்போச்சு மாயைசூழும்
மாடானு லொருபோககாய் நிறகுஞ்சொன்னேன்
மனிதருக்கு அத்தன்மை யிலலைததானே. ௩௯௭

தானென்ற பொருளதேடிச் சனஙகளகூடிச
சண்டாளத் தததுவபபேய பிடிததுக்கொண்டு
கோனென்ற குவலயத்திற பொருளைத்தேடிக்
குருவினுட பாதமதிற கூடமாட்டேன்
நானென்ற வாய்மதஙகள பேசிப்பேசி
நமன்றனக்கே யாளாகப் போனுன்பாவி
தேனென்ற திரையேழுங கிழிந்துபோகச
செபபியடா மனதுறுதி யாகப்பாரே. ௩௯௮

பாரடா தர்மமென்றும புண்ணியமென்றும
பார்தனிலே செயதலுதது அலைவார்வீணே
ஆரடா தர்மமென்ன புண்ணியமென்ன
ஆகாச சதாசிவத்தி னருளைக்கணடால்
நேரடா சிவத்தையுந்தா னறியாவிட்டால்
நீணிலததிற் றருமஙகள நிலைகூடாது
காரடா சிவமல்லோ யேகபீஜங
கண்டுகொளள மவுனத்தைக் கருதித்தானே. ௩௯௯

தானென்ற வேகமந்தப் பீஜத்தாலே
சற்குருவாம ஷடாட்சரமும் நாமேயானும்
கோனென்ற அவவேக பீஜமானுலை
குருவான மகாரமலலோ அதுவாய்ப்போச்சு
நானென்று சொல்லிவிட்டே னுஙகளுக்கு
நலமபெறவே யுப்பைவிட்டால வீணாய்ப்போச்சு
தேனென்ற வுப்பதையுஞ் செப்பிடாதே
செப்புகிறே னுவருப்பு ஆதிபாரே. ௪௦௦

பாரப்பா வுவருப்பு பூமிதானும்
பரமசிவன் பீஜமென்று மிதற்குப்பேரு
ஆரப்பா விதைமறந்தார் பெரியோரெல்லாம்
அகத்தியமா முனியேகே ளுனக்காய்ச்சொன்னேன்
நேரப்பா களர்பற்றும் மறவநாடு
நிலைப்பான பாலைவனத தேசமைந்தா
தேரப்பா காளைகண்ட முனியோரபக்கஞ்
சென்றெழுந்த மேற்புறத்தி றெளிவாய்க்காணே. ௪0௧

காணடா அதிலேதா னுவருப்பாகக்
கண்டுகொள்ளே அருணவர்ண மாகத்தோன்றும்
தானடா கதிர்போலே வளர்ந்துநிற்கு
சத்தியமாய் ரவியொளிவு வீழ்குமுனனே
கோனடா மசியென்றே சாபந்தீர்தது
குருவான பராபரையை மனத்திலெண்ணி
வானடா வாய்பேசா தெடுத்துக்கொண்டு
வையகத்தோ ரறியாமற்பதனஞ்செய்யே. ௪0௨

செய்யப்பா சுத்தசெலந் தன்னிலேதான்
சேரவினிக் கரைத்ததையுந தெளியவைத்து
ஐயப்பா பத்துமுறை யிதுபோறகாசச
அப்பனே யுப்பதுதான் வெளுத்துப்போகும்
மெய்யப்பா வுப்பதையும் பதனம்பண்ணி
மேலான பஞசசத்தி தியானஞ்செய்து
பொய்யப்பா சொல்லவில்லை யிநதநூலிற்
புத்திரனே வாதமெல்லாங கொளளையாச்சே. ௪0௩

ஆச்சடா வுப்பைவிடடால வாதம்போசசு
ஆகாது காயசித்தி யையாவையா
மூசசடா முன்பின்னுய்ச் சொலலவில்லை
மூடருக்கு இப்பூவுங கிடையாதையா
காசசடா காசினியிற் கிட்டுமோசொல்
கருத்துவைத்து மனதிரஙகிக் கலந்துசொன்னேன்
ஏசசடா விந்தப்பூ கிடையாதையா
ஏமனையுந தானடித்துத் தளளும்பாரே. ௪0௪

பாரடா தேவிபரா பரையுந்தேவி
  பாவையர்கள் நாதமதை வாங்கிக்கொண்டு
ஆரடா சூடனதைப் பொடித்துத்தூவி
  யபபனே முப்பிண்டம் விராகன்ரண்டு
நேரடா வொன்றாகச் சேர்த்துமைந்தா
  நீமகனே ரவிமுகததி லெடுத்துவைத்து
வேரடா சாபமெலலாம் நிவர்த்திசெய்து
  வேதாந்தப் பராபரையே வேண்டிககொள்ளே. ச0ரு

கொளளடா ரவிபீஜ முப்பாயப்போகுங்
  குருவாணை யுமையாணை காடடிடாதே
அல்லடா பஞசசத்தி கிருபையாலே
  யருளான வுப்பாலே யெல்லாஞசித்தி
வல்லடா வெல்லவர்க்குக் கிடடும்பாரு
  வையகத்தில் மானிடர்க்குக் கிடையாதப்பா
சொல்லடா விந்தமுறை போலேமைநதா
  சொல்லார்கள சொல்லார்க ளுண்மைபாரே. ச0சா

பாரப்பா பாரையுப்பு யார்தான்காண்பார்
  பரமசிவன் பீஜமென்றே இதற்குப்பேரு
ஆரப்பா பாரையுப்பு கல்லுப்பாச்சு
  அடங்காத வழலையுப்பு என்றும்பேரு
நேரப்பா சாரையுப்பு என்றும்பேரு
  நிலைப்பான தேவியுப்பு என்றும்பேரு
காரப்பா வுப்பையுந்தான் வாங்கிவந்து
  கருத்தாக மசியென்றே சாபந்தீரே. ச0எ

தீரடா வுப்பையுந்தான் செலத்திற்றாக்கித்
  தேவிபஞ்ச சத்தியுட தியானஞ்செய்து
ஆரடா தெளியவைத்தே யிருத்துகொண்டு
  அப்பனே பத்துமுறை யடஙகக்காய்சசி
நேரடா வுப்பையுநதா னெடுத்துப்பாரு
  நீமகனே உப்பதுவும் வெளுத்துப்போகும்
வேரடா பேசாதே அலைநதிடாதே
  வீரான பிண்டமென்று மிதற்குப்பேரே. ச0அ

பேரென்ன விந்துவென்று நாதமாச்சு
பெரியோர்க ளறிவார்கள மற்றோர்க்கேது
ஆரென்ன ஊரென்ன வருபமாச்சு
அடங்காத வாதமெல்லாங் கொள்ளையாச்சு
நேரென்ன நிலையென்ன வுன்னைக்கண்டால்
நிலக்குமடா பாரையுப்பு நினைவாய்மைந்தா
ஊரென்ன ஜனமென்ன உறவோரென்ன
உற்றுப்பா ரொன்றுமில்லை வெளியாய்ப்போச்சே. ச0கூ

போசசென்ற யிந்தவுப்பை விட்டிடாதே
பூலோகத் தார்களுக்கு மீந்திடாதே
ஆசசென்றால் முன்சொன்ன வுவருப்போடு
அடங்காத நாதவுப்பு வழலையுபபு
மூசசொன்றும் விடாதபடி யொன்றாய்ச்சேர்த்து
முத்திதருஞ் சுண்ணமென்று முடிவுசெய்து
பேசசொன்று பேசாமற் பதனம்பண்ணிப
பேதையைப்போல் வாய்பேசா திருந்துகொண்டு
காச்சென்று காச்சிவிடு லோகத்தார்க்குக்
கபட்டற சித்தனென்றாற் பலிக்கும்பாரே. சக0

பாரப்பா அமுரியுப்பு யார்தான்சொல்வார்
பராபரத்தின் விந்துவென்று மிதறகுப்பேரு
ஆரப்பா அமுரிபடி யிருபத்தைந்து
அப்பனே பாண்டத்தில் விட்டுக்காசசி
நேரப்பா காச்சியது வற்றும்போது
நிலையான வுபபாக வளர்ந்துதோன்றுந்
சேரப்பா வுப்பதிலே ஜெலநதான்வாரு
செப்புமசி யென்றேநீ சாமந்திரே. சகக

நீரடா வுப்பையுந்தான் ஜெலத்தில்மைந்தா
நீர்க்கமுடன் கரைத்தபின்பு தெளியவைதது
ஆரடா தெளிந்தஜெல மிருத்துக்கொண்டு
அப்பனே பத்துமுறை யடங்கக்காசசு
நேரடா வுப்பையுந்தான் பார்க்கும்போது
நிலைத்திடுமே யுப்பதுதான் வெளுத்துப்போகும்
வேரடா வுப்பையுந்தான் பதனம்பண்ணி
விராகத்தாள பாதமதைப் பணிந்துகொள்ளே. சகஉ

கொள்ளடா இவ்வுப்பு போலேகாரங
குவலயத்தி லில்லையடா மக்காள்மக்காள்
அல்லடா காரமென்றுஞ் சாரமென்றும்
அழகான ஆதியுப்பு என்றும்பேரு
வல்லடா வல்லவற்குக கிடைக்குமையா
மற்றோர்க்குக் கிடையாது வருந்தினாலும்
கொல்லடா நவலோக மதனைசாருங
கொள்ளைகொண்ட வாதமெல்லாம் பலிக்கும்பாரே. ௪கங

பாரப்பா புளியறியாப் பாதகர்களுப்
பார்தனிலே ஞானமுந்தான் பலியாதையா
ஆரப்பா புளியென்றால மூலமார்க்கம்
அப்பனே கருநெல்லி யென்றும்பேரு
நேரப்பா வெதிரியுந்தா னிறந்துபோவான்
நிலையான பஞசசத்தி கிருபையாலே
வேரப்பா வேறிதென்றே அலைந்திடாமல
வேண்டியதோர் புளிதனையு மெடுத்துக்கொள்ளே. ௪கச

கொள்ளடா பாண்டததி லடைததுமைந்தா
குருவான சூடமுந்தான் பலமொனறுக
அல்லடா சேர்ததிடுவாய் ஜெலந்தானவிட்டு
அப்பனே வரைத்ததைதயுங தெளியவைத்து
வல்லடா வாலையுட தியானஞ்செய்து
வாங்கடா ஜலந்தனையு மிருததுததுண்டாய்ச்
சொல்லடா காசசிவிடு முறைதான்பத்து
சுருதிமுடி பிறந்தவிடங தன்னைககாணே. ௪கரு

காணடா வுபபதுவும் வெளுத்துப்போருங
கைகண்ட வித்தையடா யார்தான்சொல்வார்
தானடா வுப்பதையும பதனம்பண்ணிச
சததிசிவ காமியென்று மனதுட்கொண்டு
நானடா சகலசித்து மாடிககொண்டேன்
நமன்வினையு மூடறுதது வெளியிலவந்தேன்
கோனடா கோனருளாற பாததிற்சென்றேன்
கூறுகிறே னிதற்குவகை குணமிதாமே. ௪கசு

தாமடா தானவனை நிலைக்கவேணுஞ்
சதநியமாய் முன்சொன்ன மூனறுபூவும்
ஆமடா அமுரியுப்பு நெல்லியுப்பு
ஆகவுமனு சுப்பென்றே அறிவாற்கண்டு
ஓமடா பஞ்சசத்தி யிதுதாமென்றும்
ஓகோகோ பஞ்சகர்த்தா ளிவர்தானென்றும்
வாமடா வாமமென்று ரூபங்கொண்டு
வாஙகினே னிந்தவுப்புத் தொகைதான்கேளே. சகஎ

கேளடா நவலோக் மெல்லாஞ்சித்தி
கிருபையுடன் காந்தமுந்தா னுருகியாடும்
ஆளடா சூதமுநதான் கடடிப்போகும்
அபபனே பாஷாண மெல்லாஙகடடும்
நாளடா தாரமுந்தான் வாஙகிவந்து
நலமான குமரிச்சார் சுருக்குமிட்டு
வாளடா சாமமொன்றப் படியேயிட்டு
வாஙகடா தாரத்தின் வகைதான்பாரே. சகஅ

பாரப்பா வாஙகியே தாரந்தன்னைப்
பாராபரையாள பாததநிற் பூசைசெய்து
ஆரப்பா பஞ்சசத்தி யுப்பையெல்லாம்
அரைத்திடுவாய வஸதுவிடடுச் சாமமநாலு
நேரப்பா அரைத்ததையும் வழிததுமைந்தா
நிலையான வுப்பையுநதான் வில்லைசெய்து
தேரபபா வுலரவைததே யெடுத்துக்கொண்டு
சித்தகத்திச சாறையுநதான் வாஙகுவாயே சகக

வாஙகடா சாறுவிட்டு வில்லைதன்னை
வாடாமற் சாமமொன் றரைத்துககொண்டு
தாஙகடா அரைத்ததையுந தாரந்தன்னிற்
சத்தியமாயப் பூசுசம தளமதாக
ஓஙகடா வுலரவைத்துச சீலமண்செய்து
ஓகோகோ பத்தெருவிற புடந்தான்போடு
நாஙகடா தேவிதனைப பூசைசெய்து
நலமான தாரமதை யெடுத்துப்பாரே சஉ0

பாரக்கையிலே தாரஞ்செந் தூரமாகிப்
  பதிஞயி ரமகோடி காந்திமீறும்
ஏர்க்கையிலே குருவருளா லறியவேணும்
  இல்லாட்டாற கைமுறையுந் தபபாவ்ணணஞ
சேர்க்கையிலே செந்தூரந திடமோமெதந்தச
  செப்பாதே அகத்தியமா முனியேயையா
காக்கையிலே யுனையறிநது காகாமைந்தா
  காக்காட்டா லென்னவுண்டு கண்டுகொள்ளே சஉக

கொள்ளடா தாம்பிரததை யுருகிமைந்தா
  குருவறிய அணுவளவு மீநதாயானல்
அலலடா தாம்பிரமும் பழுத்துப்போர்கும்
  அதுவாயி ரத்தெட்டு மாறறுமாகும்
வல்லடா வலலவர்கள் வெளிவிட்டார்கள்
  வாய்வீணா தங்களிடம் பேசிடார்கள்
சொல்லடா விதிஞலே அனந்தமநோடி
  தொங்தோமென் முடிமடா சூடசம்பாரே சஉஉ

பாரப்பா வணுவளவு முண்டாயாஞற
  பாலகனே நின்றேகம காந்திமீறும்
ஆரப்பா தேகமுந்தான் வலுத்துப்போசசு
  அனந்தவெகு கோடிமடடு மிருக்கவைக்கும்
நேரப்பா விதையறியா வுலுத்தருக்கு
  நிசமேது பொய்யேது நினைவுமேது
காரப்பா குருபாத மண்டிககாரு
  காலாநத செந்தூரக கனலேககாரே சஉங

காரடா செந்தூரப் போக்குமகோடி
  களமகுவகை யனந்தமெலலா மிதறகுளாடும்
ஆரடா தாரத்தின் செந்தூரமபோல்
  ஆடாது கெவனசிததி மவுனமார்ககம்
ஊரடா வுநதினிலே வடடங்தோறும்
  உசசிவழி தான்திறந்தே யுணரவைக்கும்
ஏரடா வெட்டிரண்டு மிதுவேகாடடும்
  என்மக்கா ளின்னமொன்று எண்ணிப்பாரே சஉச

பாரப்பா பஞ்சசக்தி தியானத்தாலே
பாலகனே செந்தூரம் படைக்கலாச்சு
ஆரப்பா அஷ்டாங்க முடிவுவேணும்
யாகாதி தறபணங்க ளனந்தம்வேணும்
நேரப்பா விராகத்தாள பூசைவேணும்
நிலையான குலதெய்வ மறியவேணும்
சேரப்பா சிந்தையொன்று யிருத்தவேணுஞ்
செல்லாட்டாற நீநரகில வீழ்வான்காணே சுஉரு

காணடா நரகமதில் வீழ்ந்திடாமற்
காமப்பாற் கானற்பாற் கனலையுண்டு
தானடா முப்பாலி னமுதமுணடு
சாதித்து நங்கையருசுரு சார்பாயுண்டு
வீணடா வீண்பேசசுப் பேசிடாமல்
வேதாந்த வுப்பைந்தும் விரித்திடாமற்
கோனடா குருபாத மறிந்தேநின்று
குவலயததிற சிந்துவிளை யாடுவாயே சுஉசு

ஆடுவாய் சித்துகள்தா னனந்தங்கோடி
அம்மம்மா வென்றுமினித தெரிந்திட்டாலும்
பாடுவாய் பலபாஷை வநதிட்டாலும்
பராபரமாய் நீயிருந்து வாழநதிட்டாலும்
நாடுவாய் சாமாறி யிருநதிட்டாலும்
நலமான யோகமெல்லா மறிந்திட்டாலும்
கூடுவாய் நிலையிலே கூடினாலுங்
குவலயத்திற் சித்துவிளை யாடாதென்றே சுஉஎ

ஆடாதே நீபடித்த வித்தையெல்லாம்
அபபனே பணம்பறிக்கப் படித்தாப்போலே
நாடாதே செகததோரை மயக்கிடாதே
ஞானியென்று செகந்தனிலே அலைந்திடாதே
கூடாதே செகத்தோர்க ளிடத்திற்சேர்ந்து
கூசசலிட்டு வாய்வீணும் பேசிடாதே
பாடாதே சாஸ்திரங்கள் பேசிடாதே
பரமகுரு தனைக்கண்டு பணிந்துகொளளே சுஉஅ

கொள்ளடா குருக்கொடுத்த வித்தையெல்லாங
குவலயததிற காட்டிவிட்டாற் பலியாதப்பா
அல்லடா வைத்யமென்ன வாதமென்ன
அப்பனே பாவம்வருந் தோஷமாகும்
கல்லடா வுன்மனசு வுருகாதப்பா
கண்டாரைப் பெண்டீரென் றடுத்திடாதே
சொல்லடா விந்தவகை யெனககுமைநதா
சொல்லாட்டாற பல்லுதிர வடிபபேன்பாரே ௪௨௯

பாரப்பா வேடமிட்டே யலைநதிடாதே
பாவையரை யனுதினமு மருவிடாதே
ஆரப்பா பொய்யொன்றுஞ சொல்லிடாதே
யடுத்தோரைக் கெடுக்காதே ஐயா ஐயா
நேரப்பா யாரொருவ ருறவும்வேணடாம
நீமகனே யொருவருட பகையும்வேண்டாம்
தேரபபா விருநதபடி விருநதால்ஞானஞ்
செப்பாதே குலதெய்வந தன்னைபபாரே. ௪௩௦

பாரப்பா பஞ்சசத்தி கிருபையாலே
பார்மகனே குலதெயவங் தன்னைமைந்தா
ஆரப்பா ஏகமென்றே வெழுத்தேயாதி
அப்பனே தசதீடசைக கிதுவேயாதி
நேரப்பா வொன்றான பொருளேயோதி
நின்றிடுவாய் சதாகாலம் நினைவிறறுககி
ஏரப்பா இடைவிடடு மறநதிடாதே
யேழையைபபோ லிருந்துமன தடஙகிக்கொளளே. ௪௩௧

கொள்ளடா மனதடஙக ஞானஙகாடடுங
குழந்தையைப்போற் பேசவைக்குங குலதெய்வந்தான்
அல்லடா விந்துவடட மறியாப்போக்கே
யரிதரிது அஷ்டகர்ம மாடவென்றால்
சொலலடா அரவமதைப் பிடித்துவந்து
சிஙகென்று மரவத்தின் சிரசிலமேவிச
சொலலடா வெதிரியுட பெயரைமாடடிச
சூடடடா குருத்தேட்டில் வரைந்துபாரே. ௪௩௨

பாரப்பா அரவத்தின் வாயினுள்ளே
பதித்திடுவாய் சீடையுந்தான் கல்வத்தாலும்
ஆரப்பா அரவமதைத் தலைகீழ்கட்டி
அப்பனே காராவின் நெய்யைவார்த்து
நேரப்பா காஞ்சிறையின் சிப்பியாலே
நீமகனே மசியென்றே யாகஞ்செய்து
தேரப்பா அரவமதைப் பொசிக்கிமைந்தா
தேவிபஞ்ச சத்தியுட தியானங்கொள்ளே. ௪௩௩

கொள்ளடா விப்படியே சாந்தான்மாறிக்
கொளுத்தடா வெதிரியுந்தான் கொதித்துப்போவான்
அல்லடா விதைத்தீர்க்க வரிதேமைந்தா
அப்பனே அவன்குலமும் பொசிஙகிப்போகும்
சொல்லடா பொசிஙகியுந்தான் நரகில்வீழ்வான்
சொன்னேனடா கொடியதொரு பாவம்பாவம்
மெள்ளடா வியாதியாலே வருவதென்ன
மெஞ்ஞானிக் காகாது விதைந்துபாரே. ௪௩௪

பாரப்பா வின்னமொரு கருமஞ்சொல்வேன்
பார்தனிலே கெருடனையுங் கொண்டுவந்து
ஆரப்பா முன்சொன்ன படினம்போலே
யாகாதி தன்னிலேதான் பொசிக்கிப்போடு
நேரபபா வெதிரியுந்தா னிறநதுபோவான்
நிலையான பஞ்சசத்தி கிருபையாலே
வேரப்பா வெறும்பேசசுப் பேசிடாமல்
விராகத்தான் பாதமதைப் பணிந்துகொள்ளே. ௪௩௫

கொள்ளடா விதினாலே கோடிபாவங
கொடிதான தோஷமடா கெருடதோஷம்
அல்லடா வத்தோஷந் தொலையாதப்பா
அரனையுந்தான் விடுகாது மற்றோர்க்கேது
வல்லடா வெளியாகச் சொன்னேனெனறு
வையகததோர் நம்மையுந்தா னேசிடாமல்
கொல்லடா கொடுமைகளைச் செய்தபேரைக்
கூறுவே னின்னமொன்று குருவிறழுனே. ௪௩௬

தானென்ற தவசிகட்கே யிடுக்கஞ்செய்யுஞ்
சண்டாளர் தனைவதைத்தாற் சாபமில்லை
கோனென்ற குருத்ரோகஞ் செய்தபேரைக்
கொன்றாலுந் தோஷமில்லை குறியைக்கேளு
நானென்ற செம்போத்தைப் பிடித்துவந்து
காட்டுவாய் மசியென்றே சிரசிற்சுற்றி
கோனென்ற குருவினிட வருளினாலே
கூசாதே சிகாரமதைத் தகட்டிற்சாத்தே. சகஎ

சாத்தடா வெதிரியுட பெயரைக்கூட்டித்
தலைமாறித தகட்டிலையும் வரைந்துமைந்தா
ஏத்தடா மசியென்றே தியானஞ்செய்து
என்மக்காள் முன்சொன்ன படிணம்போலே
வாழ்த்தடா வாலைபஞ்ச சத்தியென்று
வருந்தடா செம்போத்து தனைப்பொசிக்கிப்
பார்த்தடா வெதிரியைத்தான் பார்க்கும்போது
பார்தனிலே லகிரிகொண்டே யலைவான்பாரே. சகஅ

பாரப்பா லகிரிகொண்டு கழுதையாவான்
பார்தனிலே மனிதருக்குத் தோற்றமாட்டான்
ஆரப்பா தீர்ப்பதற்கு முடியாதையா
அப்பனே யாததாடன் னருமையாலே
கோரப்பா வுனக்கிடு சொல்லப்போமோ
நீணிலத்தில மனிதரெல்லாம் பகையுமாவார்
வேரப்பா வெறும்பேசசுப் பேசிடாமல்
விடமுண்ட கண்டறையும் வேண்டிக்கொள்ளே. சகக

கொள்ளடா தெய்வபஞ்ச சத்தியாலே
கொடியதொரு மூபபூவின் குருவினாலே
அல்லடா வேதையெல்லாங கைக்குள்ளாடும்
அடஙகாத அஷ்டசித்துங கைக்குள்ளாடும்
வல்லடா காந்தமுந்தான் பலமேபத்து
வையகத்தோ ரறியாமல வாஙகிககொண்டு
சொல்லடா மேனியிலே யரசம்பாலுஞ்
சுத்தியே காந்தத்தின் மேலேபூசே. சச0

பூசியே புடம்போட்டே யெடுத்துக்கொண்டு
புத்திரனே கலயத்தில் நொறுக்கிப்போட்டு
தேசியே காரமொடு வீரம்பூரம
செப்பாதே பாஷாணந் தாரங்கூட்டி
வாசியே மனோன்மணியே வாவாவென்று
மனோசிலையுஞ சிதகண்டம் வகையாய்க்கூட்டிக்
கூசியே திரிபாம லொவ்வொன்றுக்கு
கூட்டுவாய் பலஙகால தாகத்தானே.                    கசக

தானென்ற முன்சொன்ன முப்பூவோடு
சத்தியமாய் நெல்லியுப்பு அமுரியுப்பு
தேனென்ற ஒவ்வொன்று விராகனென்று
தெளிவாகச் சேர்த்துமிநதச சரக்கினோடே
வீணென்று சொல்லாதே வஸதுவிட்டு
விருப்பமுடன் சாமமூந்தான் நாலுமட்டும்
கோனென்ற குருவருளா லரைத்துச்சேர்த்துக்
கூறுவாய் மசியென்றே சாபந்தீரே.                    சசஉ

தீரடா மருந்தையுந்தான் சுத்திபண்ணி
சிவநமசி வாயமென்று ஜெபித்துக்கொண்டு
சேரடா காந்தத்திற் பிசறிமைந்தா
இல்விட்டுச சீலமண் செயதுதானும்
நேரடா வசசிரமாங குகையில்வைத்து
நீமகனே யூதிடுவாய் மணிபோல்வீழும்
தேரடா மணிதனையும் பொறுக்கிக்கொண்டு
தீர்க்கமுடன் மருந்தையுநதான் பிசறிக்கொள்ளே.                    சசங

கொள்ளடா விப்படியே யைந்துநோங்
குமரிபஞ்ச சத்தியுட தியானஞ்செய்து
அல்லடா வூறறிவிடு சத்துமாசசு
அப்பனே மெழுகதனைற கருததானகட்டி
மெல்லடா வுருக்கியே காந்தந்தன்னை
மேதினியோ ரறியாமற் காய்க்கமைந்தா
வல்லடா கிண்ணமது வலுத்துப்போசசு
வராகத்தாள் தனைநினைந்து மனதிற்பாரே.                    சசச

பாரப்பா வாதமெல்லாங் கொள்ளேயாச்சு
பாலுண்ணத் தேகமுந்தான் வலுத்துப்போச்சு
ஆரப்பா மறைத்தபொருள வெளியாய்ச்சொல்லி
ஆளியுப்பு மனுதியுப்பும் வெளியேவிட்டேன
நேரப்பா விந்தமுறை யொளித்தார்சித்தர்
நிச்சயமாய் வெளிதிறந்தே யுரைத்துப்போட்டேன்
சேரப்பா முன்சொன்ன முப்பூமைந்தா
செப்பாதே பூநீரென் றதற்குப்பேரே. ௪௫

பேராச்சு முப்பூவின் பெருமைசொல்வார்
பெற்றபிள்ளைக் கென்றாலும் பேசிடார்கள்
ஆராச்சு அறுசாச்சு பிசசுமாச்சு
அதிலடங்கும் வாதபித்த மனேகமுண்டு
நோராச்சு நிருவிகற்ப சமாதிக்கெல்லாம்
நிலைக்குமடா முப்பூவின் நிலையினாலே
வேராச்சு வீணருக்குப் பேசிடாதே
வேதாந்த முப்பூவின் மார்க்கந்தானே. ௪௬

தானென்ற முப்பூவின் சுண்ணந்தன்னைச
சத்தியமாய்ச் சொல்லுகிறேன் சாதித்தோர்க்குக
கோனென்ற குருவாகுஞ் சுண்ணமப்பா
கூறுதற்கு மெளிதாமோ நாவுமுண்டோ
ஏனென்ற சுண்ணமென்றுற சௌசமாச்சு
இருதயமாங் கமலமுமே பீடமாச்சு
கோனென்ற முப்பூவின விராகனைபத்து
குருவான தேசியென்று நிறுத்துக்கொள்ளே. ௪௭

கொள்ளடா வெடியுப்பு விராகன்பத்து
குருவான நாதவுப்பு விராகன்பத்து
அல்லடா வமுரியுப்பு விராகன்பத்து
அப்பனே நெல்லியுப்பு விராகனாசு
சொல்லடா இவையெல்லா மொன்றாய்ச்சேர்த்துச
சொற்பமென்றே யெண்ணாதே யாசமப்பாலால்
வில்லடா ஆட்டிவாய் சாமம்நாலு
விராகத்தாள பாதமதை மனதிறறங்கே. ௪௮

தஙகடா ஆட்டியே வழித்துசசேர்த்துத்
தவருமல வில்லைசெய்து சாபநதீர்தது
அஙகடா ரவிதனிலே யுலரவைத்து
அப்பனே யுலர்ந்தபின்பு எடுததுமைந்தா
எஙகடா திரிந்துமினி யலைந்திடாமல்
என்மக்காள மேனிச்சார் தனனைவார்த்துப
பாஙகடா வில்லைதனைப் பிரிந்திடாமற
பாரபரியே யாயியெனறு பணிந்துகொளளே. சசகூ

கொள்ளடா ஆடடுவாய் சாமம்நாலு
குஞசரனைப் போறறியுந்தான் வழித்துமைந்தா
அல்லடா முன்போலே யுலரவைத்து
அப்பனே மருந்தையுந்தா னெடுத்துக்கொண்டு
சொல்லடா வேளைசசார் சாமம்நாலு
சூட்டியே யரைத்ததையும் வழித்துக்கொணடு
மெல்லடா முன்போலே யுலரவைத்து
மேதினியிற் சித்துவிளை யாடுவாயே. சரு0

ஆடுவாய் கரும்தும்பைச சாரைவாஙகி
யப்பனே முன்போலே சாமம்நாலு
நாடுவா யரைத்ததையும் வாஙகிககொண்டு
ரவிதனிலே யுலரவைத்து நாடிப்பாரு
தேடுவாய் மசியென்றே சாபந்தீரத்துச
செபியடா நூற்றெட்டு உருவேயானல்
கூடுவாய பத்தெருவிற புடைதனைப்போடடுக
குருவான சுண்ணமதை யெடுத்துக்கொள்ளே. சருக

கொளளடா விதினலே வேதைகோடி
குருவான காயசித்தி கைக்குளளாசசு
அல்லடா செந்தூர மனேகமாசசு
அடஙகாத வைததியஙக ளெலலாஞசித்தி
வெலலடா எமனேது பாசமேது
மேலான சுண்ணமதை யென்னசொலவேன
புல்லடா புலலருககுக் கிடையாதபபா
புத்தியுளள பிளளையென்முற பேணிபபாரே. சருஉ

பாரப்பா விம்மருந்தை யீந்தாயானூற
படிரெனவே தலைவெடித்துப் பாழாய்ப்போகும்
ஆரப்பா சொல்வாரோ பூமிநாதம்
அடங்காத காயசித்தி யெல்லாமாகும்
நேரப்பா யுவருப்பு ஆகிவந்து
நிலைத்தடா பூமியுட னாதமாச்சு
தேரப்பா விதுவல்லோ வண்ணுனுபபு
செப்பாதே குருவாணை செப்பினேனே. சருங

செபபினே னிதுவல்லோ பூநீராசசு
தேவிபஞ்ச சததியுட வருளுமாசசு
ஒப்பியே சொல்வாரோ மக்காள் மககாள்
ஒருவருக்குஞ சொல்லாதே யிந்தப்பேச்சை
தப்பியே போகாதே யிந்தநூலிற
சாகாம லிருப்பதற்கு விபரங்காட்டி
மூப்புவியு மடங்குமடா வுவருப்பாலே
மோசமிலலை மோசமில்லை மொழிந்துபாரே. சருச

பாரப்பா சுததிசெலம் வேறிதென்று
பார்தனிலே மலையாதே மைந்தாமைந்தா
ஆரப்பா வுவர்நிலத்தி லன்றுபேய்ந்த
அழகான செலந்தனையு மெடுத்துக்கொண்டு
நேரபபா முன்சொன்ன வுப்பையெல்லாம்
நிலையான சாபமதை நிவர்த்திசெய்து
தேரப்பா கரைத்திடுவா யிறுத்துவாஙகிச
செப்பாதே ரவிமுகத்தில வைத்துக்கொள்ளே. சருரு

கொளளடா காசஞ்சென்று சொன்னமார்ககங
கூறுகிறேன் ரவிமுகததிற காசசவேணும்
அல்லடா அக்கினியிற் காகசிறுக்கால்
அப்பனே பூவதுவும் பாழாய்ப்போச்சு
சொலலடா பூவதுதா னெடுக்கும்போது
சூட்சநிலை சொரூபநிலை தனைப்பார்த்து
வல்லடா மானதமா யாகஞ்செய்து
விராகத்தா டன்னையுந்தான் நினைத்துபபோற்றே. சருசு

போறறடா மவுனமென்ற விஞ்ஞைதன்னைப்
பூரணமே காரணமே யென்றேயோதி
ஏறறடா வுன்னையுந்தான் நினைத்துப்போற்றி
யெனைப்போலே வாய்பேசா திருநதுகொண்டு
வாழத்தடா மூன்றெழுதது விஞைபார்த்து
வடவரையா மாயிரத்தெட டிதழிறசேர்ந்து
பார்ததடா குலதெய்வந் தன்னைப்பார்தது
பறையுப்பு வழலையுபபு பாருபாரே. சருஎ

பாரடா பறையுப்பு வெடியுப்பாச்சு
பாலகனே வழலையென்று மிதற்கும்பேரு
ஆரடா வெடியுப்பை யறிவாருண்டோ
ஆகாச கெஙகையென்ற வுவருநீராம்
நேரடா சுத்தஜல மதுதான்பாரு
நிலைக்கின்ற கஙகையடா பரையுமாச்சு
தேரடா விதையறியா ருலகத்தோர்கள
செப்புவார் வாய்மதஙகள் பேசித்தானே. சருஅ

பேசியே அழியாதே முப்பூமார்க்கம்
பிண்டமெனறும் நாதமென்று மிதற்குபபோம்
வாசியே நிறுத்துமடா விந்தப்பூவால
வல்லோர்க்குக் கிட்டுமது மறறோர்க்கேது
கூசியே திரியாதே வழலைமார்க்கங
கோடான கோடிவரை கூட்டிவைக்கும்
நாசியே சுழிமுனையாம் விந்துநாதம்
நாட்டடா முப்பூவை யறிநதுதானே. சருகூ

தானென்ற மூன்றெழுத்தின் விபரஙகேளு
சத்தியமா யிடைபின்சுழி முனையதாசசு
நானென்றும் அகாரமென்றும் உகாரமென்றும்
நடுவணையா மகாரமென்று நாடினாலும்
தேனெனற அகாரமொடு மகாரந்தானும்
தெளிவான வுகாரமுமூன் றெழுத்துமைந்தா
கோனென்ற மகாரமலலோ மவுனமாசசு
குருவான அகாரமொடு உகாரஙகேளே. சசய

கேளடா சிகாரமல்லோ வுகாரமாசசு
கிருபையுள்ள அகாரமல்லோ நகாரமாசசு
ஆளடா மூன்றெழுதது மதுவேயாசசு
அம்மம்மா மூன்றெழுதது மறியப்போமோ
நாளடா குலதெய்வந் தன்னைப்பார்த்து
நாடுவாய் மசிநசி யெனறேதமைநதா
தேளடா வாசிபத்தா யிரமடஙகத்
தேவனென்றும் விஷ்ணுசகக ரந்தான்பாரே. சகுக

பாரப்பா ஜெகமெல்லா மவரைககண்டாற்
பாராளு மரசனெனறும் பணிவாருன்னை
ஆரப்பா விஷ்ணுசக்க ரத்தினாலே
அவனியெல்லா மொருகுடைக்கீ ழாளவைக்கும்.
நேரப்பா ஐம்பதது லட்சமானல்
நிலையான காயசித்தி நிலைததுப்போசசு
தேரப்பா கோடியுந்தா னடஙகிற்றுறை
றேவிசத்தி வேலுனசகு வாய்ககுஙகாணே. சகுஉ

காணடா குலதெய்வந் தன்னைப்பார்ததுக
காரடா வாசியினு லறிநதுகொணடு
தானடா விம்மெனறே சதாநீபோறறிச
கண்ணடா மூனறெழுததுத் தயவினாலே
நானடா விப்படியே யறிநததாலே
நாதாநத வடிவேலும் நமக்குளளாசசு
கோனடா இமமெனற மவுனம்விடடாற
குடிகெடடு இடிவிழுநது கொலலுமபாரே. சகுங

பாரப்பா முன்சொன்ன பூவுஙகூடடிப்
பாலகனே பாறையுபபுச சமனுயசேர்த்து
ஆரப்பா அமுரியுபபவ் விடைககுசசோதது
அபபனே முன்சொனன மூலியெலலாம்
நேரப்பா அரைததிடுவாய முன்போலமைந்தா
நிலையான காரமுநதான சமனுயசோத்து
தேரபபா முன்போலே புடமேபோடடுத்
தேவிபஞ்ச சததியுட தியானஙகொளளே. சகுச

கொள்ளடா வெடுத்திடவே சுண்ணமாச்சு
கொடியதொரு கிரணமெல்லாங் கொதித்துப்போச்சு
அல்லடா சுண்ணமது சுருக்கமெத்த
அண்டபிண்டஞ் சேர்ந்தெழுந்த அருமையாலே
வில்லடா எந்தெந்தத் துரைக்காஞலும்
வெருசுருக்கு வெகுசுருக்கு வெடிப்புப்பையா
சொல்லடா சொல்லாதே யிந்தப்பூவைத
துருசினுட கொடுமையுந்தான் சூட்டுவேனே. சகடு

சூட்டுவேன் துருசதுவும் விராகன்பத்து
சொல்லாதே வேளைசசார் தன்னிலூர
நாட்டுவாய்போட்டுமதை யெடுத்துக்கொண்டு
நலமாக மூப்பூவின் சுண்ணந்தன்னைக்
கூட்டுவாய் பணவிடைதான் மேலேபூசி
குருவான பராபரையை மனதிலெண்ணி
வாட்டுவாய் பத்தெருவிற் புடத்தைப்போடு
வாடாத சுண்ணமது வலுத்துப்போச்சே. சகசு

போச்சடா துருசினுட சுண்ணம்போலே
பூதலத்திற் கிடையாது புகழ்ந்துபாரு
வாச்சடா மேருவுந்தா னிதிலுண்டாச்சு
வள்ளலுந்தா னனுதினமும் வாழலாச்சு
ஏச்சடா சொல்லவில்லை யிந்தச்சுண்ணம்
ஏகாந்த மூப்பூயின் கிருபையாலே
மூச்சடா தானடங்கி மேலேயேறும்
மூதண்டச சுண்ணமென்று மூாக்கம்பாரே. சகஎ

பாரப்பா சவுக்காரம விராகன்பத்து
பாலகனே வாங்கியடா நிறுத்துக்கொண்டு
ஆரப்பா மேனிச்சார் சாமமொன்று
அப்பனே சுருககிட்டு எடுத்துவாங்கி
நேரப்பா மூப்பூவின் கண்ணத்தாலே
நீமகனே பணவிடைதான் சுறறிப்பூசித்
தேரப்பா பதரெருவிற புடத்தைப்போறி
சிவசிவா செந்தூரஞ் சிவநதுபோசசே. சகஅ

போச்சடா செந்தூரம் ரவிபோற்காந்தி
புவனையுட பீஜமென்று மிதற்குப்பேரு
ஆச்சடா சவுக்காரச் செந்தூரம்போல்
ஆரறிவா ருலகத்தில் சித்தர்மைந்தா
வாசசடா லோகமெல்லாம் பொன்னாய்ப்போச்சு
வாசியிலே யனுதினமும் வாழலாசசு
பேச்சடா பேசாதே யிந்தப்பேச்சு
பெலத்ததடா காயசித்தி வலுவாம்பாரே. சகூகூ

பாரடா விதினாலே நவலோகங்கள்
பாலகனே செந்தூரம் மாகிப்போகும்
ஆரடா முப்பூவின் சுண்ணம்வேணும்
அடங்காத காயசித்தி யாகவேணும்
ஏரடா வாசிமயி லேறவேணும்
ஏகாந்தப் பாரத்தோடே யிருக்கவேணும்
தேரடா நூல்பார்த்துத் தேறவேணுஞ்
செகத்திலுள்ளோ ரறியாமல் வாழததானே. சகூ0

தானென்று சொல்வதற்கு வாயுமேது
சங்கறப மறியாரைச சமயத்தோரை
நானென்று மென்னாலேசொல்லப்போமோ
ஞாயிறையுந் திங்களையுஞ் சேராப்பேரைக்
கோனென்றுங் குருவென்றுந் துதிக்கப்போமோ
குணமான முப்பூவின் குருவில்லாடடால்
தேனென்ற வமுதரச முண்ணப்போமோ
தெளிவான மோனம்விடட சித்திகாணே. சஎக

காணடா கடுங்காரச் சுண்ணமாசசு
கைகண்ட வித்தையடா சித்தர்சொல்லார்
தானடா பஞசசத்தி சுண்ணமென்றுற
சராசரங்கள முழுவதுமே தஙகமாச்சு
ஊனடா வுடலுயிரு முறவதாக்கும்
ஒடுங்காத காந்தஞ்செந் தூரமாகும்
நானடா சுண்ணமதை யறிநதுகொண்டு
நானிலத்திற் சிதறுவிளை யாடினேனே. சஎஉ

ஆடினேன் பஞ்சசத்தி கிருபையாலே
 அடங்காத காயசித்தி யாகிப்போச்சு
நாடினேன் மூன்றெழுத்து விருசையாலே
 நாதாக்கள் சித்தனென்றும் பேருங்கொண்டேன்
கூடினேன் நங்கையஞ்சு முண்டதாலே
 கோடான கோடிவரைக் குகையைக்காத்தேன்
பாடினேன் பாவமெல்லா மகற்றிமைந்தா
 பஞ்சசத்தி வேலெடுத்து வந்தேன்காணே. ௪௭௩

காணடா யாகாதி பெலக்கவேணுங
 கண்மணியே அம்மணியைப் போற்றவேணும்
தானடா விராகத்தாள் தியானம்வேணும்
 சங்கற்ப மறிந்துமுறை சாரவேணும்
கோனடா மனக்கோணு திருக்கவேணும்
 குவிந்தமூலக் கண்ணெறிந்தே போற்றவேணும்
நானடா இம்மென்ற மவுனங்கண்டு
 நாடினேன் சிவயோக வாழ்க்கைபாரே ௪௭௪

பாரடா பஞ்சசத்தி தீட்சைக்கெல்லாம்
 பாலகனே நவக்கிரக தியானம்வேணும்
ஆரடா ஆதித்தன் றனைநிறுத்தி
 அருளான வுகாரமல்லோ அவர்க்கேபீடம்
நேரடா விந்துவிட்டு ஓங்காரங்கட்டி
 நிலைத்திடவே யூடுருவச் சூலமிட்டுச
சேரடா விந்துக்கு ஞகாரஞ்சாத்திச
 செபித்திடுவா யும்மென்றே தியானங்கூடே ௪௭௫

கூடியே பஞ்சகர்த்தா ளைவருக்குங
 குவித்திடுவா யவரவர்கள் பீஜஞ்சாத்தி
சேடியே யரவமென்ற விராகுகேது
 செபித்திடவே யவர்களுட பீஜமைந்தா
நாடியே யிராகுவுக்கோங் காரஞ்சாத்தி
 நாட்டிடுகே துவுக்குஸ்ரீங் காரமைந்தா
வாடியே திரியாமல் விந்துவட்டம்
 மைந்தனே இட்டிடவே வாயக்கும்பாரே ௪௭௬

பாரப்பா அவரவர்கள் பீஜமெல்லாம்
பாலகனே விந்துநடுக் குள்ளேவைத்து
நேரப்பா ஓங்காரஞ் சுத்திகட்டி
நிலைத்திடவே சூலமிட்டுக் கும்பந்தன்னைத்
தேரப்பா தெறமையா விலையுஞ்சாத்தித்
தெளிந்திடவே சூலமிட்டுக் கும்பந்தன்னை
ஆரப்பா அட்சதையு மடியிறருக்கி
அஷ்டகர்ம வாலையென்ற தியானங்கொள்ளே சஎஎ

கொள்ளடா தேவிபரா சத்தியென்று
குருவான பராபரத்தை மனதிலெண்ணி
அல்லடா நீயாக சாலைசுற்றி
அப்பனே நவக்கிரகந் தன்னைமாட்டிக
சொல்லடா குளிகையும் யாகந்தன்னிற்
சொல்லியே இம்மென்று நடுவேசாத்தி
வில்லடா பூரணமும் வெளியாய்ப்போகும்
மேலான வேல்வந்து வாய்க்கும்பாரே சஎஅ

பாரப்பா நவக்கிரகந் தனக்குமைந்தா
பரிவான ரவியல்லோ தர்புமாசசு
ஆரபபா சோமனொடு பஞ்சகர்த்தாள
அடஙகாத ராகுவொடு கேதுமைந்தா
நேரபபா இவர்களநவக கிரகமாசசு
நிலையான நவசித்த றென்றும்போம்
தேரப்பா இவர்களன்றிப் பூசையேது
தெளிந்தவர்கசுே பஞசசததி தருகுவாளே சஎகூ

தருகுவா ளஷ்டகர்ம வாலைமைந்தா
சத்தியமாய்த் தோலாசை யற்றபேர்க்கு
வருகுவாள் அஙகிலியு மென்றுசொல்லி
வாசியுமே யாயிரத்தெட டடஙகிறைக்கால்
உருகுவா யஷ்டகர்மஞ் சித்தியாகும்
ஓகோகோ ஆசையற்ற உறவுமற்றுப்
பெருகுவாய் இம்மென்றே மவுனம்பூட்டிப
பேசாதே குலதெய்வந் தன்னைக்காணே சஅ0

காணடா மூனறெழுத்தை யறியமாட்டான்
கங்குலரவி தனைக்கடந்து இருக்கமாட்டான்
தானடா பநதனஙகள சொலலககேளு
தாயாராம் பராசத்தி வாலைக்கெல்லாம்
கோனடா இட்சைபத்தா மகாரபீடம்
கொளுததடா திக்குபநத னஙகளாக
நானடா பந்தனஙகள் செய்துமைந்தா
ஞாயிறிலே திஙகளையு மடக்கினேனே சஅக

அடக்கினேன் திக்குபந்த னஙகளாலே
அஷ்டகெசம் அஷ்டயஸ்து அருளுமாச்சு
முடக்கினேன் மூன்றெழுத்து விபரத்தாலே
முன்பின்னு யோடுகிற கலையுமாறி
மடக்கினேன் காலறிநது மைநதாநானும
மாருத வாசனையை மறந்துதளளித்
தடக்கினோம் பேசாதே அகாரமூலஞ்
சாதித்தா லவராமென் றதுதான்பாரே சஅஉ

பாரப்பா தேவிபஞ்ச சத்திக்கெல்லாம்
பாலகனே மானதமாம் பூசைசெய்ய
ஆரப்பா நிறைந்தவர்ன நகையுஞ்சீலை
யாத்தாடகும் வடுகனுக்கு மஙகேசாத்தி
நேரப்பா கிரீடகுண் டலமுஞ்சாத்தி
நீமகனே விராகததாரா தனக்குமைந்தா
வேரபபா பேசாதே யாத்தாளுககும்
வெகுவாகப பஞசசத்தி மேலேசாத்தே சஅங

சாததடா மணிமந்தர தீபதூபஞ்
சகலகலை வாணியென்றே யருளைப்போற்றி
ஏத்தடா திக்குப்பந் தனமுஞ்சொல்லி
யென்மகனே எந்தனுக்குப் பூசைகேளு
வாழ்த்தடா இம்மென்றே கவுனந்தாக்க,
வஸ்துவென்றே யுனைத்தானும் நினைந்துகொண்டு
ஏத்தடா மானதமாம் பூசைமெத்த
வெனமகனே தேகததிற் பழுதிலலாமற்
காத்தடா பூசைசெய்வாய் மவுனம்நோக்கிக
காலனுநதா னப்புறமுங் கடப்பான்பாரே சஅச

பாரப்பா நமநமா வென்றுசொல்லிப்
பாலகனே பூஷணங்கள் பூட்டவேணும்
ஆரப்பா தேவிக்கிப் படியேபூட்டி
யஷ்டகர்ம வாலையென்ற வருளைப்போற்றி
நேரப்பா செவ்வரளிய புஷபததாலே
நீமகனே தேவிக்கர்ச சனையுஞ்செயது
தேரபபா விந்துவிலே மனக்கணூட்டி
தேவிபஞச சத்தியென்றே திடமாய்ப்போற்றே ௪௮௫

போறறுதறகு லகுவல்ல வாய்ப்பேச்சலலப்
புததிரனே மூன்றெழுததை விட்டபோக்கு
ஏறறுதறகு மவுனமதை விடடபோகரு
எநநாளு மஷடகர்மஞ சித்தியில்லை
வாழ்ததுதறகு ஆயிரதெட டடஙகுமபோது
வநதடா வாலையுட வமுதமைநதா
காறறிலையு மதிகமடா ஆததாளபாதங்
காடடாதே லோகததார் தனககுப்பாரே ௪௮௬

பாரடா அஙகுலியு மெனறுலமைநதா
பாலகனே திடசையடா நாலாந்திடசை
ஆரடா இம்மூல மறியாரில்லை
யாத்தாடகு மாயிரத்தெட டொடுஙகவேணும
நேரடா இம்மந்த்ர மடஙகுமட்டும்
நீமகனே தோலாசை மறககவேணும
வேரடா மாயையிலே மனநதான்நாட
வீணாக வெடுததமுறை தவறிப்போசசு
தேரடா தவறுமற கவனம்வைததுச
சிநதிததுப பாாத்திடவே தெளிநதுபோச்சே ௪௮௭

போசசடா தெளியவெனறுல லகுவுமலல
புததிரனே இநதமுறை செய்யவேணும
ஆசசடா செயகையிலே மோகமானல
அஷடகாம வாலையுட அருளும்போசசு
நீசசடா வெறும்பேசசாற பூசையென்று
நீணிலததிற செததவர்க ளனநதஙகோடி
மூசசடா மேலேறி மநருகுதனனில
முழுஙகுமடா கருவியெனற வாயுதானே ௪௮௮

நாமென்ற கருவியுந்தா னுயரப்பாயுஞ
சததியமாய் நீதானும் பதறிடாதே
கோனென்ற குருவருளால் மைந்தாகேளு
குருவான மூபபூவின் சுண்ணந்தன்னை
தேனென்று பணவிடைதான் கொண்டாயானாற்
சிவசிவா நிலைதனிலே சேர்ந்துபோகும்
நானென்ற வாயுவெல்லா மொடுஙகிப்போகும்
நமன்பாச மானதுவும் நாசமாச்சே சூ௬௯

ஆச்சடா அஷ்டகர்மம் வாலைபோலே
அருளான ஞானமுந்தான் கிடையாதப்பா
வாசசடா கிடைத்தோர்க்கு யோகசித்தி
வழலையென்ற மூப்பூவின் மார்க்கஞசித்தி
காசசடா கஙகுல்ராவிக் குளளேசேர்க்குங்
கலஙகெழுந்த கருவியெல்லாம் பொசிஙகப்போகும்
மூச்சடா மேலடஙகுங கீழ்நோக்காது
முனைமூக்குப் பிடரியுந்தான் மூட்டினேனே ௬௭0

மூட்டினேன் முன்பின்னு மிந்தநூலில்
மோசமாய்ச சொல்லவில்லை மொழிதான்மைந்தா
நாட்டினேன் செந்தூரஞ சுண்ணமார்க்கம்
நலமான துருசோடு வழலைப்போக்குங்
காட்டினேன் வெளிதிறந்த இந்தநூலிற்
கபாலியஷ்ட கர்மியுட கிருபையாலே
மூட்டினேன் திறந்திட்டேன் வெளியாய்விண்டேன்
மும்மணியு மிதுவாசசு மோதிப்பாரே ௬௭௧

பாரப்பா பஞ்சசத்தி யஷ்டகர்மி
பாலகனே ஒன்றுகும் பழுதிலலாமல்
ஆரப்பா விராகததா ளவடகுத்தானும்
ஐயையோ மூன்றோடு பிறவியாளை
நோப்பா வடுகனென்றுற சிவனுமாசசு
நித்யபிர்ம்ம சாரியெனறு மவற்குப்பேரு
தோபபா தெளிநதவர்ககோ இதுபோறகானுங்
தெளியாத தேகமென்ன தேகந்தானே ௬௭௨

தானென்ற ஜெனனமது எடுத்தானாற்
சாற்றுமஷ்ட கர்மியுட தயவுவேணுங்
கோனென்ற குருவருளுங கிட்டவேணுங
குஞ்சரமு மஞ்சலென்றே கூடவேணும்
தேனென்ற துறவதனி லிருக்கவேணுஞ
செகத்தோரைக் கண்டாலு மொடுங்கவேணும்
நானென்ற ஆணுவத்தைத தள்ளவேணும்
நாதாந்தப் பூரணத்தை நாடிப்பாரே ௪௯௩

பாரப்பா மூன்றெழுத்து விஞ்ஞசவேணும்
பாலகனே தசதீட்சை பதறும்வேணும்
ஆரப்பா அஷ்டகர்ம பஞ்சசத்தி
அங்கிலியு மென்றதோ ரருளும்வேணும்
நேரப்பா திககுபந் தனஙகளவேணும்
நிலையான சாரணையை நிறுத்தவேணும்
வேரப்பா குருவென்று நினைந்திடாமல்
விததகனே குருசெயலை நினைந்துகொள்ளே ௪௯௪

கொள்ளடா வாலைவிஞ்ஞை முடிவுகாட்டிக்
குருவான யோகாதி முறையுஙகாட்டி
வல்லடா வாயுவுசா ரணையுஙகாட்டி
வாடாத குலதெய்வத தருளுஙகாட்டி
சொல்லடா கூடசநிலைச் சொரூபங்காட்டிச
சுருதிமுடி வானதொரு பொருளுஙகாட்டி
அல்லடா நவக்கிரக சிததிகாட்டி
யருளான கவுனத்தில் முடிவுஙகாட்டி
கல்லடா கற்பமுறை யாவுஙகாட்டி
கண்மணியே வெளிதிறந்து விட்டேன்பாரே ௪௯௫

பாரப்பா இம்மென்றால் விந்துவட்டம்
பாலகனே இதுவிட்டால் மவுனம்போசசு
ஆரப்பா விந்துவிலே மனக்கண்ணாடி
யனுதினமுந் தாரணையுஞ செய்யும்போது
நேரப்பா கறபமென்ன பூசையென்ன
நிலையான சுற்றத்தா ருறவுமென்ன
தோப்பா சாதியிலே சமயமென்ன
திரவியஙகள சம்போக மெதுவுஙகாணே. ௪௯௬

காணடா மவுனமென்ற வருளேக்கண்டாற்
கயிலாச நாதனென்ற கடவுளாச்சு
தானடா மவுனம்விட்டா லெல்லாம்பாழாஞ்
சத்திசிவந் தனையறிய மாட்டான்பாவி
கோனடா குருநிலையு மறியமாட்டான்
கோடான கோடிசித்து ஆடமாட்டான்
நானடா பரமசிவம் நம்மைக்கேட்க
நாதாந்த தீட்சைபத்தும் நாட்டினேனே  சகூ௭

நாட்டினேன் பரமசிவந் தனக்குமைந்தா
நலமான மூப்பூவின் மார்க்கங்காட்டிப்
பூட்டினேன் திறவுகோல் திறந்துமைந்தா
பூமியுட நாதவிந்து பொருந்தகாட்டிக்
காட்டினேன் பாறையுப்பு வெடியுப்பென்று
கலந்தெழுந்த வனுஷியுப்பு நாதமாகச்
சூட்டினேன் சுரோணிதசுக் கிலமாமென்று
சொல்லாலே சிவனென்றுஞ் சொன்னேன்பாரே  சகூஅ

பாரப்பா இம்மென்றே விட்டாயானாற்
பாலகனே மவுனமெல்லாம் பாழாய்ப்போகும்
ஆரப்பா இம்மென்றால் மவுனமாகச்
அடிப்படையுந் தான்பெலக்கு மனேகஞ்சித்தி
நேரப்பா விந்துவென்றும் பீஜமென்றும்
நிலையான பிடரிவழி மார்க்கமென்றுந்
தேரப்பா சௌசசம் போகமென்றுந்
தெளிவாகச் சொன்னதெல்லா மகாரமாச்சே  சகூகூ

ஆச்சடா இந்நூலைத் தெளிவாய்ப்பாடி
யஷ்டகர்ம வாலையுட அருளுங்காட்டி
வாச்சடா குலைமைத்தான் தெய்வமென்றும்
வாடாத தீபமணி பூரமென்றும்
நீச்சடா எனவாக்கி னுலேசொல்லி
நிதயபிர்மச சாரியென்று முருகனுனேன்
மூச்சடா அனுநூறு தெளிவதாக
முதன்மையாம் குருபானுல முடிவதாமே.  ௫00

சுப்பிரமணியர் ஞானம்-நூ.

முற்றிற்று.

---

டி. சாரதா புத்தகசாலையில் தயாராய் இருக்கும்

# புஸ்தக விளம்பரம்.

| வயித்திய தினுசுகள். | | | ஜோதிட தினுசுகள். | | |
|---|---|---|---|---|---|
| போகர் 7000-பாடல் | 4 | 0 | மணிகண்ட கேரளம் | 0 | 8 |
| கொங்கனர் கடைக்காண்டம்500 | 0 | 8 | வால்மீகர் ஆரூடம் மூலமும்உரை | 0 | 3 |
| போகர் 700-பாடல் | 0 | 10 | சப்தரிஷி வாக்கியம் 1000-பாடல் | 0 | 12 |
| போகர் ஜெனனசாகரம் | 0 | 12 | சாதக சிந்தாமணி | 2 | 0 |
| போகர் சரகுவைப்பு-800 | 0 | 14 | மங்களேஸ்வரியம் | 2 | 0 |
| உரோமரிஷி வயித்தியம்-500 | 0 | 10 | ஜாதக பாரிஜாதகம் | 0 | 10 |
| அகஸ்தியர் வயித்தியகாவி-1500 | 1 | 0 | சாதக அலங்காரம்மூலம் | 0 | 12 |
| வயித்திய அகராதி | 1 | 0 | ஷை மூலம் உரையுடன் | 2 | 0 |
| நாடி சாஸ்திரம் | 1 | 0 | | | |

## டிராமா தினுசுகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சதி-அனுசூயா | 0 | 4 | ஞானசவுந்தரி | 0 | 8 |
| ஷை இரண்டாவது | 0 | 4 | அல்லி அர்ஜுன | 0 | 4 |
| லவகுச சரித்திரம் | 0 | 4 | ஷை இரண்டாம்பாகம் | 0 | 4 |
| ஷை இரண்டாவது | 0 | 4 | நல்லதங்காள் | 0 | 4 |
| கோவிலன்-கண்ணகி | 0 | 4 | ஷை இரண்டாம்பாகம் | 0 | 4 |
| ஷை இரண்டாவது | 0 | 4 | வள்ளி சரித்திரம் | 0 | 4 |
| பார்ஸி சகுந்தலா | 0 | 4 | பார்ஸி மதிவல்லப மோகனு | 0 | 4 |
| பார்ஸி லங்காதகனம் | 0 | 4 | ஷை திருப்புகழ் வர்ணமெட்டு | 0 | 3 |
| கஜேந்திரமோக்ஷம் | 0 | 4 | சத்தியவான் சாவித்திரி | 0 | 4 |
| இந்திரசபாஅமராவதி முதல்பாகம் | 0 | 4 | சற்குண சாவித்திரி | 0 | 3 |
| ஷை இரண்டாவது பாகம் | 0 | 4 | தசாவதார சரித்திரம் | 0 | 6 |

## பல தினுசுகள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பழனியாண்டவர் காவடிசிந்து | 0 | 4 | தத்துவக்கட்டளை | 0 | 1 |
| பகவத்கீதை பாக்கெட்சயிஸ் 18-அத்தியாயங்கள் படங்களுடன் | 0 | 8 | ஜீவோற்பத்தி சிந்தாமணி | 0 | 4 |
| ஷை சுலோகபயிண்டு | 0 | 10 | வாகிமாலை | 0 | 1 |
| ஷை பெரியது வசனம் | 1 | 8 | சடாசரமாலை | 0 | 1 |
| ஷை கிரந்த சுலோகம் தமிழ் அர்த் | 1 | 0 | ஆண்டாள் திருப்பாவை | 0 | 2 |
| கட்டளைகொத்து | 1 | 0 | மகாத்மாகாந்திவந்தேமாதரம் கதர் தணிபாட்டு | 0 | 1 |
| ஷை கிலேசு | 1 | 8 | சீமைதுணி கதர்துணி சண்டை | 0 | 1 |
| நாஞ்ஜீவ வாதக்கட்டளை வசனம் | 0 | 1 | பர்மாடாப்பு என்னும்நொண்டிசிந்து | 0 | 1 |
| ஷை மூலமும் விசேஷட விருத்தி உறை 5-படங்களுடன் | 0 | 8 | சங்கீதபாலவித்தியாபோதினி | 0 | 12 |
| கிஷ்டானுபூதி மூலமும் உரையும் | 1 | 0 | மங்கைமோகனுள் | 0 | 8 |
| சிதம்பரசுவாமிகள் இயற்றிய உபதேசஉண்மை விலை அணு | 0 | 12 | சுப்பிரமணியர்ஞானம் 500-பாட | 1 | 0 |
| தேவிபக்திரச கீர்த்தனை | 0 | 6 | சலலாபலாவணி எரிந்தகட்சி எரியாதகட்சி | 0 | 6 |
| | | | மோக்ஷராமாயணம் | 0 | 1 |

T. சாரதா புத்தகசாலை,

நெ. 23, ஐயப்பன் தெரு, மிண்ட பிளடிங் போஸ்டு, மதறாஸ்.